Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



**கல்வி**

சமுதாயத்தை உயர்த்துவதற்குத் தான் கல்வி என்பதை ஒவ்வொருவரும் உணர வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**



**போற்றுதல்**

பிறப்பதும், மறைவதும் இயற்கை. ஆனால் மக்கள் போற்றத் தக்க வகையில் காரியமாற்ற வேண்டும்.

-தந்தை பெரியார்

மலர்: 7 சென்னை 19-2-83 சனி வெளியீடு 20-2-83 ஞாயிறு இதழ்: 122

## திருச்செந்தூரில் அதிக ஓட்டுகள் பெற்று

# கழகமே வெல்லும்

### ஆய்வு நடத்திய கல்லூரி புள்ளி இயல் துறை தகவல்

**சென்னை, பிப். 19- திருச்செந்தூர் தொகுதியில் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகமே அதிக வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றிபெறும் என்று தாம்பரம் கிறித்துவக் கல்லூரி புள்ளி இயல்துறை, ஆய்வு நடத்தி அறிக்கை வெளியிட்டுள்ளது.**

தாம்பரம் கிறித்துவக் கல்லூரி புள்ளி இயல் துறையினர், முக்கிய தேர்தல் சமயங்களில் அந்த தொகுதிக்கு சென்று வாக்காளர்களைச் சந்தித்து யாருக்கு ஆதரவு என்பது பற்றி புள்ளி விவரம் சேகரிப்பது உண்டு.

1967-ல் காங்கிரஸ் வீழ்ந்து அண்ணாவின் தி.மு.க. வெற்றி பெறும் என்று கணித்து முன் கூட்டியே கூறியிருந்தனர்.

அதே போல 1977-ல் புரட்சித் தலைவருக்கே செல்வாக்கு அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் ஆட்சிக்கு வரும் என்று முன்கூட்டியே அறிவித்தது.

இவ்வாறு கிறித்துவக் கல்லூரியின் புள்ளி இயல் துறை நடத்திய கணக்கெடுப்புகள் பொய்த்ததில்லை.

இப்போது இக்கல்லூரியின் புள்ளி இயல் துறையைச் சேர்ந்த எம். எஸ். சி. மாணவர்கள் எஸ்.ஜி.மேகநாதன், எம். வி. சுவாமிநாதன் தங்களது புள்ளியியல் படிப்பின் ஒரு கட்டமாக திருச்செந்தூர் தொகுதிக்குச் சென்று சில பகுதிகளில் வாக்காளர்களைச் சந்தித்தனர். கிராமங்களிலும், நகரங்களிலுமாக 250 வாக்காளர்களைச் சந்தித்து கருத்தறிந்தனர்.

அனைத்துந்திய அண்ணா தி.மு.கழகமே செல்வாக்கு உள்ள கட்சியாக இருக்கிறது என்று அவர்கள் தங்கள அறிக்கையில் குறிப்பிட்டுள்ளனர்.

#### 53 சதவீத ஆதரவு

பேட்டிக்காக சந்தித்தவர்களில் 53சதவீதமக்கள் அனைத்திந்திய அண்ணா தி.மு.க.வுக்கே நிச்சயம் ஓட்டளிப்போம் என்று கூறினார்கள் என்று அந்த அறிக்கையில் அவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

கழகத்திற்கு அடுத்தபடியாக தி.மு க. உள்ளது. 24 சதவீதத்தினர் திமுக ஆதரவாளர்கள்.

இ.காங்கிரசை ஆதரிப்போர் 14 சதவீதத்தினர். ஜனதாக் கட்சியை ஆதரிப்பவர்கள் 6 சதவீதத்தினா.

அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம் திருச்செந்தூர் தொகுதியில் அதிக வாக்கு வித்தியாசத்தில் வெற்றிபெறும் என்பது இந்த நேரத்தில் தெரிகிறது என்று அவர்களின் புள்ளி இயல் அறிக்கை கூறுகிறது.

#### எம். எஸ். சி. மாணவர்கள்

எம். எஸ், சி. புள்ளியியல் துறையில் படிக்கும் மாணவர்கள் தங்கள் பாடத்தின் ஒரு கட்டமாக இந்த ஆய்வை நடத்தி அறிக்கை தந்திருப்பதாக புள்ளியியல் துறை தலைவர் டாக்டர் கிப்சிரோமணி ஒரு அறிக்கையில் தெரிவித்துள்ளார்.

## பூலான்தேவி இருக்கும் சிறைச்சாலைக்கு செல்லமந்திரிக்கு தடை

**குவாலியர், பிப். 19. பூலான்தேவி இருக்கும் சிறைச்சாலைக்குள் சென்று பார்க்க மத்திய பிரதேச சிறைத்துறை மந்திரியை அச்சிறைச்சாலை அதிகாரி அனுமதிக்கவில்லை.**

உத்திரப்பிரதேச போலீசாரை கதிகலங்க வைத்த பிரபல கொள்ளைக்காரி பூலான்தேவி, மத்திய பிரதேச முதலமைச்சர் முன்பு சரணடைந்தது தெரிந்ததே.

தற்போது பூலான் தேவியும் அவளது சகாக்களும் குவாலியர் மத்திய சிறைச்சாலையில் வைக்கப்பட்டுள்ளனர்.

இதற்கிடையில், பூலான்தேவி, பெண் கைதிகள் பகுதியிலிருந்து ஆண் கைதிகள் வார்டுக்கு அவளது சகாக்களுடன் இருக்க வசதியாக மாற்றப்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

இதுகுறித்து நேரில் கண்டறிய மத்தியப் பிரதேச சிறைத்துறை மந்திரி ஹாஜி இனாயத் முகமதுகுவாலியர் சிறைச்சாலைக்கு சென்றார்.

ஆனால் மந்திரி சிறைச்குள் சென்று பார்க்க சிறைச்சாலைசூப்பிரண்ட் அகர்வால் அனுமதிக்கவில்லை.

மந்திரி சிறைச் சாலைக்குள் சென்று பார்வையிடுவது சில பிரச்னைகளை உருவாக்கும் என்பதால் மந்திரியை சிறைச்சாலைக்குள் சென்று பார்வையிட வேண்டாம் எனக் கூறியதாக அகர்வால் கூறினார்.

மந்திரி முகமது இந்த விவகாரம் குறித்து விசாரிப்பதாக பின்னர் தெரிவித்தார்.

பூலான் தேவிக்கும் அவளது சகாக்களுக்கும், மற்ற கைதிகளுக்கு வழங்கப்படும் உணவே அளிக்கப்படுவதாகமந்திரி முகமது கூறினார்.

## சதி செய்ததாக ஜனதா தலைவர்கள்மீது பங்காரப்பா புகார்

பெங்களூர், பிப். 19- கர்நாடக கிராந்தி ரங்கா தலைவர் எஸ். பங்காரப்பா, நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:

ஜனதாத் தலைவர் சந்திரசேகரும் மற்றும் ஜனதாக்கட்சித் தலைவர்களும் சேர்ந்து, கர்நாடக முதல்வர் தேர்வு வவகாரத்தில் 'சதி' செய்ததாகத் தெரிகிறது.

இது விஷயத்தில் கர்நாடக மக்களுக்கு குறிப்பாக பிற்படுத்தப்பட்ட மக்கள் நம்பிக்கை மோசடிக்கு ஆளாக்கப்பட்டுள்ளனர்.

முதல்வர் ராமகிருஷ்ண ஹெக்டேயின் அரசு முழுபதவிக் காலமும் நீடிக்க வேண்டும் என்பது எனது தனிப்பட்ட கருத்து ஆகும்.

மார்ச் 2-ந்தேதி கட்சியின் நிர்வாகக்குழு கூடி கட்சியின் எதிர்காலம் குறித்து முடிவெடுக்கும்.

இவ்வாறு பங்காரப்பா கூறினார்.

## வாலிபர் படுகொலை

சென்னை, பிப். 19- சென்னை எம். ஜி. ஆர். நகரைச் சேர்ந்தவர் ஏழுமலை; வயது 26. இவருக்கும் ஆட்டோ டிரைவர் பெருமாளுக்கும் முன் விரோதம் இருந்துவந்ததாம் நேற்று ஏற்பட்ட தகராறில் ஏழுமலை 8 இடங்களில் வெட்டப்பட்டு படு கொலை செய்யப்பட்டார். இது சம்பந்தமாக பெருமாள் கைது செய்யப்பட்டார். போலீசார் புலன் விசாரணை நடத்தி வருகின்றார்கள்.

*

## ரகசிய போலீஸ் என்று ஏமாற்றி பிடிபட்டார்

சென்னை, பிப். 19- மயிலாப்பூர் நாச்சியப்ப செட்டி தெருவைச்சேர்ந்தவர் ரவிகுமார். வயது 25. இவரது தந்தை கஜபதி.

ரவிகுமார் தன்னை ரகசிய போலீஸ் இன்ஸ்பெக்டர் என்று கூறி ஒரு பெண்ணை ஏமாற்றி மணந்ததாக கைது செய்யப்பட்டார். உடந்தையாக இருந்ததாக அவரது தந்தையும் கைதானார். மணம் செய்து கொண்ட பெண்ணின் உறவினரிடம் தங்கநகை மோசடி செய்ததாகவும் ரவிகுமார் மீது வழக்கு தொடரப்பட்டது.

### கோர்ட்டில் சாட்சியம்

## இந்திராவை வரவேற்க சென்ற காங்கிரசாரை தாக்கிய தி. மு. க. வினர்

**சென்னை, பிப். 19 இந்திரா காந்தியை வரவேற்கச் சென்ற காங்கிரசாரை தி மு. க. வினா தாக்கியதாக போலீஸ் அதிகாரி ஒருவர் கோர்ட்டில் சாட்சியமளித்தார்.**

சென்னை 5-வது அடிஷனல் செஷன்ஸ் கோர்ட்டில் நீதிபதி மருதமுத்து முன்பு இந்திரா காந்தியை கொலை செய்ய முயற்சித்த வழக்கு இன்று விசாரணைக்கு வந்தது.

காஞ்சிபுரம் காவல் நிலைய இன்ஸ்பெக்டராக இருந்த கே. செல்லத்துரை சாட்சியமளித்த போது கூறியதாவது:-

நான் காஞ்சிபுரம் நகர போலீஸ் இன்ஸ்பெக்டராக ஏப்ரல் 76 முதல் மே 78 வரை பணியாற்றினேன்.

சிவகாஞ்சி, விஷ்ணு காஞ்சி ஆகிய இருகாவல் நிலையங்கள் எனது கீழ் இயங்கி வந்தது.

30-10-77 அன்று இந்திராகாந்தி காஞ்சிபுரம் வரஏற்பாடுசெய்யப்பட்டு இருந்தது.

அவர் வருகையை ஒட்டி அங்கு பொதுக்கூட்டம் நடத்த, மாவட்ட கண்காணிப்பாளருக்கு காங்கிரஸ் கட்சியினர் கடிதம் எழுதியிருந்தனர்.

#### தடைச் சட்டம்

காஞ்சிபுரம் வர இருந்த இந்திராகாந்திக்கு தி.மு.க. வினர் கறுப்புக்கொடி காட்ட இருந்ததாலும் அப்போது அமைதிக்கு பங்கம் ஏற்படும் என கருதியதாலும் கண்காணிப்பாளர் 27-10-77 அன்று ஓர் தடைச் சட்டம் பிறப்பித்திருந்தார்.

ஊர்வலம்-கூட்டம் நடத்த போலீசாரின் அனுமதி பெற வேண்டும் எனக் கூறப்பட்டிருந்தது. 30-10-77 அன்றுஇந்திரா காந்திக்கு கறுப்புகொடி காண்பிக்க அனுமதி கோரி நகர தி. மு. க. பொறுப்பாளர் ராஜமாணிக்கம் துணை கண்காணிப்பாளருக்கு கடிதம் எழுதினார்.

தி.மு,கவைச் சேர்ந்த சே. பி. என் மணி தான் தனிப்பட்ட முறையில் கறுப்புக்கொடி காட்ட அனுமதி கோரி கடிதம் எழுதினார்.

30-10-77 அன்று மேலண்டை ராஜவீதியில் சாலை ஓரமாக அமைக்கப்பட்டிருந்த தடுப்பு வேலிக்கு உள்ளே இருந்து கொண்டு கறுப்புக்கொடி காட்ட அனுமதி கொடுக்கப்பட்டது.

ஆனால் 29-10-77 அன்று மதுரைக்கு இந்திரா காந்தி சென்றபோது அங்கு ஏற்பட்ட பயங்கர கலவரத்தைப் போல காஞ்சியிலும் ஏற்படலாம் எனக் கருதி கலெக்டர் கறுப்புக்கொடி காட்டுவதற்கான அனுமதியை ரத்துச் செய்தார்.

கலெக்டர் பிறப்பித்த தடை உத்தரவை மக்களுக்கு ஒலிபெருக்கி

(2-ம பக்கம் பார்க்க)

## இ. காங்கிரஸ்- தி. மு. க. வைச் சேர்ந்த 100 மாணவர்கள் கழகத்தில் இணைந்தனர்

சென்னை, பிப். 19- சென்னையிலுள்ள அனைத்துக் கல்லூரிகளிலிருந்தும் தி. மு. க. மற்றும காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த 100க்கும் மேற்பட்ட மாணவர்கள் தலைமைக் கழகத்தில் தமிழக வருவாய்த் துறை அமைச்சர் எஸ். டி. எஸ், முன்னிலையில் கழகத்தில் தங்களை இணைத்துக் கொண்டனர்.

மாணவர் தலைவர் நாகராசன், அனைத்துக் கல்லூரி மாணவர் பேரவை துணைத் தலைவர் பிரபு மற்றும் ஸ்ரீரங்கன், ராசேந்திரன், கண்ணப்பன் ஷாகீர், அபீப்அரி, மணிவாசகம் ஆகிய மாணவர் பிரதிநிதிகள் அப்போது உடனிருந்தனர்.

## கலை விருந்து நாளை

## 20 அம்ச திட்டத்தை நிறைவேற்றுவதில் தமிழகமே முதலிடம்

### மத்திய திட்டக்குழு அறிவிப்பு

**சென்னை, பிப். 19- 20 அம்ச திட்டத்தை செயல்படுத்துவதில் இந்தியாவிலேயே தமிழகம்தான் முதலிடம் வகிக்கிறது என்று மத்திய அரசின் திட்டக்குழு தெரிவித்திருக்கிறது.**

பிரதமரின் 20 அம்சத் திட்டத்தை செயல்படுத்துவதில் புரட்சித் தலைவர் அரசு தீவிரமாக இருப்பது தெரிந்ததே. நாட்டின் பல்வேறு வளர்ச்சி திட்டங்களை கழகஅரசு செயல்படுத்தி வருகிறது.

பிரதமரின் 20 அம்சத் திட்டத்தை செயல்படுத்துவதில் இந்தியாவிலேயே தமிழகம்தான் முதலிடம் வகித்து வருகிறது.

1982-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் டிசம்பர் மாதம் வரை தேசிய கிராமப்புற வேலைவாய்ப்புத் திட்டத்தில் 155 சதவிகிதம், கொத்தடிமைகளுக்கு மறுவாழ்வு அளிப்பதில் 100 சதவிகிதமும் தமிழக அரசு செயல்படுத்தியுள்ளது.

மத்திய அரசின் திட்டக்குழு நடத்திய ஆய்வு இந்தத் தகவல்களை தெரிவித்திருக்கிறது.

#### தமிழக அரசு சாதனை

ஆரம்ப சுகாதார துணை மையங்கள் அமைப்பதில் 100 சதவிகிதமும், ஒருங்கிணைந்த குழந்தைகள் வளர்ச்சி பணிகளில் 100 சதவிகிதமும் மலைவாழ் மக்களின் குழந்தைகளுக்கு உதவி அளிப்பதில் 80 சதவிகிதமும், உபரி நில விநியோகத்தில் 79 சதவிகிதமும், ஒருங்கிணைந்த கிராமப் புறவளர்ச்சித் திட்டத்தில் 75 சதவிகிதமும், மரம் நடுவதில் 73 சதவிகிதமும் கிராமங்களுக்கு குடிநீர் வழங்குவதில் 72 சதவிகிதமும் தமிழக அரசு செயல்படுத்தி சாதனை புரிந்துள்ளது என்றும் மத்திய திட்டக்குழு தெரிவித்துள்ளது.

*

## பாவலர் முத்துசாமி தேர்தல் பிரச்சாரம்

சென்னை, பிப். 19- திட்டக்குழு துணைத் தலைவர் பாவலர் முத்துசாமி 21-ந்தேதி திருச்செந்தூர் செல்கிறார். அன்று முதல் தேர்தல் முடியும் வரை திருச்செந்தூர் தொகுதியில் அவர் தேர்தல் பிரச்சாரம் செய்கிறார்.

### திருச்செந்தூர் தொகுதியில் தி. மு. க. சரிகிறது:

## ஆறுமுகனேரி தி.மு.க. செயலாளர் கழகத்தில் இணைந்தார்

தூத்துக்குடி, பிப். 19- திருச்செந்தூர் தொகுதியிலுள்ள ஆறுமுகனேரி தி. மு. க. செயலாளர் சாலமன்ராஜ் அந்தக் கட்சியிலிருந்து விலகி கல்வி அமைச்சர் அரங்கநாயகம் முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தார்.

திருச்செந்தூர் தொகுதியில் உள்ள ஆறுமுகனேரி நகரிய தி. மு. க. செயலாளர் சாலமன்ராஜ். அந்தப் பகுதி தி.மு.க. விவசாய சங்க செயலாளர் முருகன்.

இவர்கள் இருவரும் கருணாநிதியின் எதேச்சாதிகாரப் போக்கைக் கண்டித்து அந்தக் கட்சியிலிருந்து விலகி கல்வி அமைச்சர் அரங்கநாயகம் முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தனர்.

அண்ணாவின் உண்மைத் தம்பி புரட்சித் தலைவர் தான். சத்துணவுத் திட்டம் போன்ற நல்ல பல திட்டங்களை புரட்சித் தலைவர் நிறைவேற்றி வருகிறார். எனவே மற்ற தி. மு. க. வினரும் தி. மு. க. விலிருந்து விலகி அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக வேட்பாளர் அமிர்தராஜ் வெற்றி பெற பாடுபட வேண்டுகிறோம்" என்று அவர்கள் வெளியிட்டுள்ள அறிக்கையில் குறிப்பிட்டுள்ளனர்.

## பஸ்கள்மோதல்:காயமுற்றவர்கட்கு புரட்சித்தலைவர் ஆறுதல்

சென்னை, பிப். 19- சென்னை அண்ணா மேம்பாலத்தில் இரு பஸ்கள் நேருக்கு நேராக மோதிக் கொண்டன.

இந்த விதத்தில் காயமுற்றவர்களுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் ஆறுதல் கூறினார்.

பாரிமுனையிலிருந்து திருவான்மியூர் செல்லும் 19 எஸ்-பஸ்சும், தியாகராயநகரிலிருந்து அண்ணா சதுக்கம் செல்லும் 13 பி-பஸ்சும் அண்ணா மேம்பாலத்தில் நேருக்கு நேராக மோதிக் கொண்டன.

இதனால் '13 பி' பஸ் டிரைவர் அன்வர், '19 எஸ்' பஸ் டிரைவர் பாண்டியன் ஆகியோர் உட்பட 19 பேர் காயமுற்றனர். ஒட்டுனர்கள் இருவரும் ராயப்பேட்டை மருத்துவமனையில் சேர்க்கப்பட்டனர். மற்ற 17 பேரில் 5 பேர் பெண்கள். 3 பெண்கள் அரசினர் பொது மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர். மற்றும் 2 பேர் ராயப்பேட்டை மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார்கள். மற்ற 12 பேர் சிகிச்சை பெற்று திரும்பினார்கள்,

விபத்து பற்றி கேள்விப்பட்டதும் முதல்வர் புரட்சித்தலைவர் ராயப்பேட்டை மருத்துவமனைக்குச் சென்றார். காயமுற்றவர்களைப் பார்த்து ஆறுதல் கூறினார். அவர்களுக்கு தீவிர சிகிச்சை அளிக்கும்படி மருத்துவர்களைக் கேட்டுக் கொண்டார்.

விபத்து எவ்வாறு நடந்தது என்பது குறித்து காவல் துறையினரிடம் விசாரித்தறிந்தார்,

# தீயசக்திகளை ஒடுக்க ஒத்துழைப்பு தாருங்கள்: ஜனாதிபதி கோரிக்கை

**புதுடெல்லி, பிப். 19- தீயசக்திகளையும், தீவிரவாதிகளையும் ஒடுக்க பொதுமக்கள் ஒத்துழைப்பு தாருங்கள் என்று பொதுமக்களுக்கு ஜனாதிபதி ஜைல்சிங் கோரிக்கை விடுத்தார்.**

நாடாளுமன்ற கூட்டு கூட்டத் தொடர் நேற்று துவங்கியது. அதில் ஜனாதிபதி ஜைல்சிங் இந்தியில் உரையாற்றினார். அப்போது அவர் தெரிவித்ததாவது:-

கடந்த ஆண்டை விட இந்த ஆண்டு விலைவாசி 2.8 சதவீதம் உயர்ந்துள்ளது. மழை பெய்யாததால் உற்பத்தி அவ்வளவாக பாதிக்கப்படவில்லை. பொருளாதாரத்தில் ஓரளவு வளர்ச்சியே ஏற்பட்டுள்ளது.

## பல்வேறு சாதனைகள்

இந்த ஆண்டு வான வெளி ஆராய்ச்சியில் மேலும் பல புதுமைகளை கண்டறியும் விதத்தில் "டபி." என்றராக்கெட்டை பூமியை சுற்றிப் பறக்க விட இருக்கிறோம், இதன் மூலம் பலசாதனைகளை இந்தியா ஏற்படுத்தும். பனிப்பிரதேசமான தென் துருவத்திற்கு (அண்டார்ட்டிக்) நமது நாட்டைச்சேர்ந்த விஞ்ஞானிகள் முதன் முதலில் வெற்றிகரமாக சென்று திரும்பி உள்ளனர்.

இரண்டாவது கோஷ்டியும் தற்போது தென் துருவத்திற்கு சென்றுள்ளது.

ஆசிய விளையாட்டு போட்டியினால் டெலிவிஷன் நிலையங்கள் பரவலாக்கப்பட்டன. கலர் டிவிக்களும் வந்தன. இதன்மூலம் கிராமப்புறங்களிலும் டெலிவிஷனைப்பார்க்கும் வசதியை மத்திய அரசு செய்துள்ளது.

## முன்னேற்றப் பாதையில்...

முன்னேற்றப் பாதையில் சென்று கொண்டு இருந்தாலும் இந்தியாவில் சில தீய சக்திகள் இருந்து கொண்டு தங்களுடைய கைவரிசையைக் காட்டி வருகின்றன. இதனால் நாட்டின் ஒற்றுமைக்கு பங்கம் ஏற்பட்டுவிடுமோ என்ற அச்சம் ஒருபுறம் எழத்தான் செய்கிறது.

தேச விரோத சக்திகள் இந்தியாவின் வடகிழக்குப் பகுதியிலும், மற்றும் சில இடங்களிலும் தலைதூக்கி உள்ளன. வகுப்புக் கலவரம், மதக் கலவரம் போன்றவற்றை தூண்டிவிட்டு அதன்மூலம் இந்தியாவை துண்டாக்க நினைக்கும் தீயசக்திகளுக்கு மக்கள் பலியாகக் கூடாது.

அப்படிப்பட்ட தீயசக்திகளையும், தீவிரவாதிவாதிகளையும் கண்டுபிடித்து நடவடிக்கை எடுக்க அரசு எடுக்கும் எல்லா நடவடிக்கைகளுக்கும் மக்கள் ஒத்துழைப்பு தர வேண்டும்.

இந்தியா தனது அண்டை நாடுகளுடன் நட்புடன் இருக்கத்தான் விரும்புகிறது. உலகில் அமைதியை ஏற்படுத்துவதற்காக தொடர்ந்து இந்தியா பாடுபடும்.

இந்த நிலையில் அமெரிக்காவிடமிருந்து பாகிஸ்தான் நவீன போர் விமானங்களையும் ஏவுகணைகளையும்வாங்கி குவிக்கிறது. இது இந்தியாவிற்கு கவலை தந்தாலும் உலகில் அமைதியை நிலைநாட்ட இந்தியா தொடர்ந்து பாடுபடும்.

சீனாவுடன் நட்புறவுடன் இருக்கத்தான் இந்தியா விரும்புகிறது. இரண்டு நாடுகளுக்கும் இடையேஉள்ள எல்லைத் தகராறு பற்றி 3-வது கட்டப் பேச்சு வார்த்தை நடத்தப்படும். மற்ற அண்டை நாடுகளான இலங்கை, நேபாளம், பூடான் ஆகியவைகளுடன் இந்தியா நல்ல உறவு வைத்துள்ளது.

## காமன்வெல்த் மாநாடு

டெல்லியில் அடுத்த மாதம் நடுநிலை நாடுகள் மாநாடு நடக்க உள்ளது. இதில் பல சர்வதேச பிரச்சனைகளுக்கு தீர்வு ஏற்படும் என்று நம்புகிறோம்.

இந்த ஆண்டின் இறுதியில் "காமன் வெல்த்" நாடுகளின் மாநாடு இந்தியாவில் நடக்க உள்ளது. அது வெற்றி பெற வாழ்த்துகிறேன்.

இவ்வாறு ஜனாதிபதி ஜைல்சிங் கூறினார்.

அதன் பிறகு ஜைல்சிங்கின் உரையை துணை ஜனாதிபதி இதயதுல்லா ஆங்கிலத்தில் படித்தார்.

## 6 கட்சிகள் புறக்கணிப்பு

ஜனாதிபதியின் உரையை மக்கள் கட்சி, ஜனதா, பாரதீய ஜனதா, ஜனநாயக சோஷலிஸ்ட், அகாலிதளம், (சீக்கியர் கட்சி), ஜெகஜீவன்ராம் காங்கிரஸ் ஆகிய 6 கட்சிகள் புறக்கணித்தன.

நாடாளுமன்றத்திற்கு ஜனாதிபதி ஜைல்சிங் வந்தபோது அவருடன் பிரதமர் இந்திரா காந்தி, துணை ஜனாதிபதி இதயதுல்லா, நாடாளுமன்ற சபாநாயகர் பல்ராம் ஜாக்கர் ஆகியோர் வந்தனர்.

ஜனாதிபதியின் உரைக்குப் பிறகு மாநிலங்களவை வழக்கம் போல் தனியாகக் கூடியது. முதலில் ரஷ்ய அதிபர் பிரஸ்னேவ், பூமிதான இயக்கத் தலைவர் வினோபா பாவே மாநிலங்களவை உறுப்பினர் பிலுமோடி, ஆகியோர் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் தீர்மானம் ஒன்றை மாநிலங்களவை தலைவர் இதயதுல்லா கொண்டு வந்தார். உறுப்பினர்கள் அனைவரும் ஒரு நிமிடம் எழுந்து நின்று மவுன அஞ்சலி செலுத்தினர்.

---

46-வது வட்டத்தில்

இன்று மாலை

## பொருளாளர் மாதவன் பேசுகிறார்

சென்னை, பிப். 19— சென்னை, 46-வது வட்டம் முத்துகிருஷ்ணன் தெருவில் (பத்மநாபா திரையரங்கு அருகே) இன்று மாலை 7 மணிக்கு கழகப் பொருளாளர் மாதவனுக்குப் பாராட்டுப்பொதுக் கூட்டம் நடக்கிறது.

டி. மணியப்பன் தலைமையில் நடக்கும் இந்தக் கூட்டத்திற்கு வட்டச்செயலாளர் எம். பி. ஆனந்தன் முன்னிலை வகிக்கிறார்.

கழகப் பொருளாளர் மாதவன், இ.மதுசூதனன் ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, தரங்கை கண்ணன், மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, கு. கஜேந்திரபாபு, என். வி. என். செல்வம், எம். எஸ்.மணி, என்.ஏ.துரை கே.எல்லப்பன், ஏ. பாலசுந்தரம், எஸ். பி. டி. விஜயன், எஸ். ஜெகந்நாதன், டி.கே.கணேசன். ஜெ. கிருபாகரன், எஸ். எம். கருணாநிதி முகவை தயனூதீன், ஆர்.எஸ்.டி. சுவாமிநாதன் எல். குமார், எஸ். தட்சிணாமூர்த்தி, எம். ராம்தாஸ், டி. ஆறுமுகம், மதனகோபால், பாபுலால் சர்மா ஆகியோர் பேசுகின்றனர்.

முத்துகிருஷ்ணன் தெரு சுப்புராயத்தெரு ஆகிய இடங்களில் கழக கொடிக் கம்பக் கல்வெட்டுக்களை திறந்து வைத்து கழகப் பொருளாளர் மாதவன் கழகக் கொடிகளை ஏற்றி வைக்கிறார்.

---

# சிறுவிவசாயிகளுக்கு கறவை மாடுகள்: தையல் எந்திரங்கள்

## தஞ்சை குடவாசலில் வினியோகம்

**கும்பகோணம், பிப். 19- ஒருங்கிணைந்த கிராம வளர்ச்சித் திட்டத்தின் கீழ் தஞ்சை மாவட்டம் குடவாசலில் சிறு விவசாயிகளுக்கு கறவை மாடுகளும், ஏழை எளிய பெண்களுக்கு தையல் எந்திரங்களும் விநியோகிக்கப்பட்டன.**

விவசாயிகள் ஏழை எளிய மக்களின் பொருளாதார முன்னேற்றம் அடைவதற்கானபல்வேறு திட்டங்களை தமிழக அரசு செயல்படுத்தி வருகிறது.

ஒருங்கிணைந்த கிராமப்புற வளர்ச்சித் திட்டத்தின் கீழ் தஞ்சை மாவட்டம் குடவாசலில் நேற்று 80 சிறு விவசாயிகளுக்கு கறவைமாடுகள் வழங்கப்பட்டன. விவசாயிகள் மற்றும் தொழிலாளர்களுக்கு தஞ்சாவூர் மாவட்ட ஆட்சித்தலைவர் எஸ். மெய்க்கண்டதேவன் 80 கறவைமாடுகளை வழங்கினார். தவிர 59 ஏழை எளிய பெண்களுக்கு தையல் எந்திரங்களை அவர் வழங்கினார்.

தையல் வேலையில் பயிற்சி பெற்ற ஏழைப் பெண்கள் பலரும் எந்திரங்களைபெற்றுக்கொண்டனர். 190 மனைப் பட்டாக்களும் அப்போது ஆதிதிராவிடர் மற்றும் பிற்பட்ட வகுப்பினர் ஆகியோருக்கு வழங்கப்பட்டது.

இந்த நிகழ்ச்சியின் போது பொதுமக்கள் பலரும் தங்களது கோரிக்கைகள் அடங்கிய மனுக்களை மாவட்ட ஆட்சித்தலைவரிடம் நேரிடையாகவே கொடுத்தனர்.

சுமார் தொளாயிரத்துக்கும் மேற்பட்ட மனுக்களை மெய்க்கண்டதேவன் பெற்றுக் கொண்டார். குடிநீர் வசதி இல்லாத இடங்களில் குடிநீர் வசதிகள் விரைவில் செய்யப்படும் என்று அப்போது மாவட்ட ஆட்சித்தலைவர் உறுதி அளித்தார்.

---

## அமைச்சர் குழந்தைவேலு மகள் திருமண நிச்சய தாம்பூலம்

கோயம்புத்தூர், பிப். 19— உள்ளாட்சித் துறை அமைச்சர்குழந்தைவேலுவின் மகள் சுமதிக்கும் கோவை வேலப்ப கவுண்டன் பாளையத்தைச் சேர்ந்த ராமசாமியின் மகன் கணேசனுக்கும் திருமணம் நிச்சயிக்கப்பட்டுள்ளது. இவர்களின் திருமணநிச்சய தாம்பூல விழா, கோவை மாவட்டம் பொள்ளாச்சி நேரு கல்யாணமண்டபத்தில் நேற்று நடைபெற்றது.

மணமகன் கணேசன் கோவையில் உள்ள "பாங்க் ஆப் தமிழ்நாடு" வங்கியில் கேஷியராக பணியாற்றுகிறார். தாம்பூல விழாவுக்கு வந்தவர்களை அமைச்சர் குழந்தைவேலு, சட்டசபை உறுப்பினர் ரத்தினம் ஆகியோர் வரவேற்றனர்.

கோவைத்தம்பி எம்.எல்.ஏ. மாஜிஸ்திரேட்டுகள் சங்கத்தலைவர் முத்துகிருஷ்ணன், செயலாளர் பாலசந்தர் மாவட்ட (ரூரல்) போலீஸ் அதிகாரி ஜெயகாந்தன் மற்றும் கழக பிரமுகர்கள் பலரும் விழாவில் கலந்து கொண்டனர்.

சுமதி — கணேஷ் திருமணம் அடுத்த மாதம (மார்ச்) சென்னையில் நடைபெறுகிறது.

---

இன்றுமாலை

## கழக கலாநிகழ்ச்சி

சென்னை, பிப். 19— 58-வது வட்டம் சந்தியப்பன் தெருவில் அறச்செல்வர் எம்.ஜி.ஆர்.மன்றம்சார்பில் இன்றுமாலை டேப் நடராசனின் கலா நிகழ்ச்சி நடைபெறுகிறது.

மு. கன்னியப்பன் தலைமையிலும் தீனன் முன்னிலையிலும் நடக்கும் இந்த கலா நிகழ்ச்சியின்போது தரங்கை கண்ணன், வ. நீலகண்டன் மு. பாண்டியன், டி. கே. ராமசுகுமார். தேவேந்திரன் மூர்த்தி, செல்வராஜ், குமார் சந்திரன் ஆகியோர் வாழ்த்துரை வழங்குவர்.

---

# கோர்ட்டில் சாட்சியம்..

(முதல்பக்கத் தொடர்ச்சி)

தண்டோரா மூலம் அறிவித்தோம்.

இந்திராகாந்திக்கு கறுப்புக் கொடி காட்டப் போவதாக தி.மு.கவினர் ஒரு பொதுக் கூட்டம் மூலம் முடிவு செய்தனர். 30-10-77 அன்று இந்திராகாந்தி காஞ்சிபுரம் வரும்போது அசாம்பாவிதம் நடக்காமல் இருக்க காவல் துறையில் நடவடிக்கை எடுததனர்.

அன்று காஞ்சிபுரத்தில் தி.மு.கவினர் மேலண்டை ராஜவீதியிலும், பெரிய கம்மாளத் தெருவிலும் கூடினர்.

போலீசார் எச்சரித்தும் அவர்கள் கலையவில்லை. மேலண்டை ராஜவீதியில் இந்திராவை வரவேற்க சென்ற காங்கிரஸ்காரர்களின் 2 கார்களையும் ஒரு மோட்டார் சைக்கிளையும் தி.மு.க.வினர் அடிதது நொறுக்குவதாக தகவல் வந்தது.

இந்த தகவலின் பேரில் கம்மாளத் தெருவுக்கு சென்ற நான் அடிதது நொறுக்கப்பட்ட கார்கள மற்றும் மோட்டார் சைக்கிளையும் பார்த்தேன்.

## தி. மு. க. வினர் ஓட்டம்

என்னைக் கண்டவுடன் அங்கிருந்த தி.மு.க.வினர் ஓடி விட்டனர்.

காரில் இருந்த காங்கிரஸ்காரர்களுக்கும், மற்றும் சிலருக்கும பலத்த காயம் ஏற்பட்டிருந்தது. அந்த இடத்தில் ஏராளமான கண்ணாடிகள் சிதறிக்கிடந்தன.

சவுக்குகம்புகள் இரும்புக் கம்பிகள் ஆகியவற்றைக் கைப்பற்றினேன்.

## வளைவுகட்கு தி. மு. க.வினர் தீவைத்தனர்

அங்கிருந்து கூட்டம் நடக்க இருந்த காந்தி ரோடுக்குச் சென்றேன். இரட்டை மண்டபம் அருகில் அமைக்கப்பட்டிருந்த வளைவுக்கு தி. மு. க.வினர் தீ வைத்தனர்.

அருகில் இருந்த காங்கிரஸ் கொடி கம்பம். வெட்டப்பட்டு தீயில் தள்ளப்பட்டிருந்தது. இந்திராகாந்தி, நேருவின் படங்களும் நெருப்பில் நாசமடைந்திருந்தன.

இதற்குள்ளாக தி.மு.கவினர் பெரியகம்மாளத் தெரு, காலண்டர் தெரு சந்திப்பில் அமைக்கப்பட்டிருந்த மற்றொரு வளைவுக்கும் தீவைத்தனர். அதோடு மற்றும் 4 வளைவுகளுக்கும் தீவைத்து விட்டனர்.

மூங்கில் மண்டபம் அருகில் காரில் வந்து கொண்டிருந்த காங்கிரஸ்காரர்களை, திமுகவினர் தடுத்து நிறுத்தி கற்களை வீசித்தாக்கினார்கள்.

அவர்களைத் தடுத்து நிறுத்தி முக்கியமான ஆர்ப்பாட்டக்காரர்களை கைது செய்தேன்.

மாலை 5 மணி சுமாருக்கு கோவிந்தன் அரங்கநாதன் தங்கவேல் பிள்ளை சடகோபன் ஆகிய காங்கிரஸ்காரர்கள் வன்முறை சம்பவங்கள் குறித்து புகார் கொடுத்தனர்.

இவ்வாறு கே.செல்லத்துரை சாட்சியமளித்தார்.

அரசு தரப்பில் அரசு வக்கீல் பி. ராஜமணிக்கம் மற்றும் வக்கீல் சவுந்தரராஜன் ஆகியோர் ஆஜராயினர்.

---

## மூப்பனாருக்கு அமைச்சர் மறுப்பு

# கழக ஆட்சியில் தொழில் துறை முன்னேறுகிறது

**திருச்சி, பிப். 19- தமிழகத்தில் தொழில் வளர்ச்சி குறைந்ததற்கு கழக அரசு காரணம் என்று கருப்பையா மூப்பனார் பேசியிருப்பதற்கு தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு மறுப்புத் தெரிவித்திருக்கிறார். தொழில் துறை கழக ஆட்சியில் வளர்ந்து வருகிறது என்றும் அவர் கூறினார்.**

புதுக்கோட்டை செல்லும் வழியில் தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு திருச்சி விமானநிலையத்தில் நிருபர்களிடையே பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:—

கடந்த 17 ஆண்டுகளாக தமிழகத்தில் மிகவும்குறைவாகவே மத்திய அரசு முதலீடு செய்துள்ளது.

ரு 150 கோடி செலவிலான சேலம் உருக்காலை சுமார்20ரூ.கோடி திட்ட மதிப்பீட்டில் ராணிப்பேட்டையில் அமைக்கப்படும் பாரத கனரகமின் சாதன ஆலைப்பிரிவு தவிர மத்திய அரசு முதலீடு எதுவும் கடந்த 17 ஆண்டுகளில் கிடைக்கவில்லை. தமிழக அரசுக்கு மேலும் மத்திய அரசு திட்டங்கள் கிடைக்க வேண்டும்.

## முற்றிலும் தவறானது

தமிழகத்தில் தொழில் வளம் குறைந்ததற்கு கழக அரசுதான்காரணம் என்று கருப்பையா மூப்பனார் கூறியிருப்பது முற்றிலும் தவறானது. அவரது பேச்சு கண்டனத்துக்குரியது.

தமிழகம் தொழில் வளர்ச்சியில் பின்தங்கியிருப்பதாகக் கூறுவது தவறு. கழக ஆட்சி பொறுப்பேற்றப் பின்னர் தமிழகத்தில் சிறு தொழில்களுக்கு ஊக்கம் அளிக்கப்பட்டுள்ளது.

மத்திய அரசின் நல்ல பல திட்டங்கள் தமிழகத்துக்குக் கிடைக்க டெல்லியில் உள்ள மூப்பனார் போன்ற தலைவர்கள் உதவ முன் வரவேண்டும்.

அடுத்த சில ஆண்டுகளுக்கு நிலக்கரி கிடைப்பதில் தட்டுப்பாடு இருக்குமாதலால் மதுரை மாவட்டம் பாளையத்தில் சிமெண்ட் ஆலை அமைப்பது சாத்தியம் இல்லை என்று மத்திய அரசு தெரிவித்திருக்கிறது இந்த முடிவை மத்தய அரசு மறுபரிசீலனை செய்ய வேண்டும் என்று தமிழக அரசு கேட்டுக் கொண்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

---

சுப்ரீம் கோர்ட்டில்

## நீதிபதி அழகிரிசாமி மறைவுக்கு இரங்கல்

புதுடெல்லி, பிப். 19. உச்சநீதிமன்ற முன்னாள் நீதிபதி அழகிரிசாமியின் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து நேற்று புதுடெல்லி உச்சநீதி மன்றத்தில் இரங்கல் கூட்டம் நடைபெற்றது.

உச்ச நீதி மன்ற தலைமை நீதிபதி ஒய்.வி. சந்திரசூட், அட்டர்னி ஜெனரல் எல். என். சின்கா, உச்சநீதி மன்ற வழக்கறிஞர் சங்கத் தலைவர் சிங்வி ஆகியோர் நீதிபதி அழகிரிசாமியின் சேவைகளைப் பாராட்டிப் பேசினர். தங்களது இரங்கலையும் அவர்கள் தெரிவித்தனர்.

---

தேர்தல் பிரச்சாரத்துக்கு

# புரட்சிதலைவர் வருகை

# முக்கிய அறிவிப்பு

திருச்செந்தூர் இடைத்தேர்தல் பிரச்சாரத்துக்கு நம் இதய தெய்வம் புரட்சித்தலைவர் வருகிறார். திட்டமிட்டபடி அவர் பயணத்தை துவக்குவார்.

அறிவிக்கப்பட்ட நிகழ்ச்சிகள், ஏற்பாடு செய்யப்பட்ட இடங்களில் மட்டும் அவரது கார் நிற்கும்; அந்த இடங்களில் தரப்படும் வரவேற்புகளை ஏற்றுக்கொள்வார்.

**அனுமதிக்கப்பட்ட நிகழ்ச்சிகள் தவிர வேறு நிகழ்ச்சிகளை கழகத் தோழர்களோ பொது மக்களோ ஏற்பாடு செய்யக்கூடாது.**

புரட்சித்தலைவருக்கு யாரும் மாலை அணிவிக்கக் கூடாது.

**மாலைக்குப்பதிலாக தேர்தல்நிதி தான் அளிக்க வேண்டும்.**

**அப்படி தேர்தல் நிதி அளிக்க விரும்புவோர் மட்டும் மேடைக்குவர அனுமதிக்கப்படுவார்கள்.**

இந்த நடைமுறையை அனைத்துக் கழகத் தோழர்களும் கண்டிப்பாக பின்பற்ற வேண்டும் என்றுகேட்டுக் கொள்கிறோம்.

**செ. அரங்கநாயகம்**

கழக தேர்தல் பணிக் குழுத்தலைவர்

---

# திருச்செந்தூர் சட்டமன்ற தேர்தல்: கழக தேர்தல் பணிக்குழு வேண்டுகோள்

திருச்செந்தூர் சட்டசபை இடைத்தேர்தலில், கழக வேட்பாளர் அமிர்தராஜ் வெற்றி பெறுவதற்கான சூழ்நிலை கனிந்து வருகிறது.

எல்லாவற்றுக்கும் மகுடம் சூட்டும் வகையில் முதல்வர் புரட்சித்தலைவரின் சுற்றுப்பயணம் அமைய உள்ளது.

திருச்செந்தூரில் கழகம் பெறும் மகத்தான வெற்றியில் தங்கள் பங்கும், பணி இருக்க வேண்டும் என ஒவ்வொரு கழகத் தோழர் விரும்புவது இயல்பு.

இது எதிர்பார்த்ததுதான்.

தேர்தல் பணிக்குழுவிடம் எதனையும் எதிர்பாராது, சொந்தப் பொறுப்பில் தேர்தல் பணி செய்ய விரும்பும் கழகத் தோழர்கள் தேர்தல் களத்திற்கு வருவதை வரவேற்கிறோம்.

அவர்கள் திருச்செந்தூரில் உள்ள தலைமை தேர்தல் காரியாலயத்திற்கு வரவேண்டும்.

அவர்கள் எந்தெந்த தொகுதியில் என்ன பணிகளை செய்ய வேண்டும் என தேர்தல் காரியாலயம் கட்டளை இடுகிறதோ அந்தக் கட்டளைகளை ஏற்று வாக்குப்பதிவு முடியும் கடைசி நேரம வரை பணியாற்ற வேண்டும். வாகன வசதி உள்ள கழகத் தோழர்கள் கடைசி நேர தேர்தல் பணிக்கு தங்கள் சொந்தப் பொறுப்பில் வருவதை வரவேற்கிறோம்.

அப்படி வரவிரும்பும் தோழர்கள் உடனடியாக திருச்செந்தூரில் உள்ள தலைமை தேர்தல் காரியாலயத்திற்கு தகவல் தர வேண்டும்.

தங்களுக்கு ஒதுக்கப்படுகின்ற பகுதியில் வாக்கு பதிவு முடியும்வரை பணியாற்ற வேண்டும்.

23-ந் தேதி முதல் முதல்வர் திருச்செந்தூர் தொகுதியில் சுற்றுப்பயணம செய்கிறார்.

அவரது காருக்கு பின்னால் அந்தந்தப்பகுதிகளில் பணி செய்யும் கார்கள் மட்டுமே வரவேண்டும்.

வெளியூர் தோழர்களின் கார்களோ தொகுதியில் வேறு பகுதிகளில் பணியாற்றும் கழக பொறுப்பாளர்களின் கார்களோ கண்டிப்பாக வரக்கூடாது.

இது புரட்சித்தலைவரின் அன்புக் கட்டளை இக்கட்டளையை மீறி புரட்சிததலைவர் அவர்களின் காருக்குப் பின்னால், வர முயற்சிக்கும் தோழர்கள் தேர்தல் பணிக்கு இடையூறு செய்பவர்களாகவே கருதப்படுவர்.

**செ. அரங்கநாயகம்**

தலைவர்: கழக தேர்தல் பணிக்குழு

திருச்செந்தூர்

---

## பெல்லாரியில் மீண்டும் அமளி: பாங்குகளுக்கு தீவைப்பு

பெல்லாரி, பிப். 19— கர்நாடக மாநிலம் பெல்லாரியில், போலீஸ் நிலையத்தில் பெண் கற்பழிக்கப் பட்டதாக செய்தி வந்தது தெரிந்ததே. இதைத் தொடர்ந்து பெரும் கலவரம் மூண்டது. நேற்று மீண்டும் கலவரம் ஏற்பட்டது. 3 வங்கிகளுக்கு தீவைக்கப் பட்டது. கும்பலைக் கலைக்க துப்பாக்கி சூடு நடந்தது. மீண்டும் ஊரடங்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

## மறைவு

சென்னை 110—வது வட்ட கழகசெயலாளர் செ.சுந்தரத்தின் தகப்பனார் செல்லையா (வயது 60)நேற்று காலமானார். அவரது இறுதி சடங்கு இன்று மாலை 4 மணி அளவில் ஏ. வி, எம். பின்புறம் உள்ள சுடு காட்டில் நடை பெறுகிறது.

### திருச்செந்தூர் தேர்தல்:

## வீடுவீடாக கழகச் செயல் வீரர்கள் தீவிர பிரச்சாரம்

**திருச்செந்தூர், பிப். 19- திருச்செந்தூர் சட்டமன்ற தொகுதியில், கழக வேட்பாளர் அமிர்தராஜை ஆதரித்து கழகத் தொண்டர்கள் வீடு வீடாக வாக்காளர்களைச் சந்தித்து பிரச்சாரம் செய்து வருகிறார்கள்.**

திருச்செந்தூர் சட்டமன்றதொகுதியில் மார்ச் 1-ந்தேதி தேர்தல் நடக்க உள்ளது தெரிந்ததே.

கழகத்தின் சார்பில் போட்டியிடும்ஆர். அமிர்தராஜை ஆதரித்து தொகுதி முழுவதும் கழகத் தொண்டர்கள் தீவிர பிரச்சாரத்தில் ஈடுபட்டுள்ளனர்.

தொகுதி முழுவதும், கழகத்தின் வெற்றியை இப்போதே உறுதிப் படுத்தும் வகையில், கழக வேட்பாளர் அமிர்தராஜுக்கு வாக்காளர்கள் அமோக வரவேற்பு அளித்து அவருக்கே வாக்களிப்பதாக உறுதி கூறி வருகிறார்கள்.

வேட்பாளர் அமிர்தராஜும் மற்றும் கழக பிரமுகர்கள், தொண்டர்கள். மன்ற மறவர்கள் மகளிர்மற்றும் கழக தொழிற்சங்க பிரிவினர் தொகுதி முழுவதும் வீடு வீடாகச் சென்று வாக்காளர்களைச் சந்தித்து ஆதரவு கோரி வருகிறார்கள்.

உடன்குடி ஊராட்சி ஒன்றியபகுதியில், மேற்கு ராமநாதபுரம் மாவட்டக் கழகசெயலாளர் கே.கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன், எம். பிச்சை எம்.எல்.ஏ, சவுந்தரராஜன் எம். பி, பாலகிருஷ்ணன் எம். எல். ஏ. ஆகியோரும் மற்றும் ஏராளமான கழகத்தவரும் வீடு வீடாகச சென்று அமிர்தராஜுக்கு ஆதரவு கோரி பிரச்சாரம் செய்து வருகிறார்கள்.

உடன்குடி நகரப் பகுதிகளில் நகரக் கழகச் செயலாளர் செலலத்துரையும் மற்றவர்களும் தீவிர தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டுள்ளனர்.

இடங்களில் கழகக்கொடிகளும், தோரணங்களும் கட்டப்பட்டு கழக அரசின் சாதனைகள் குறித்து தட்டிகளில் எழுது வைக்கப்பட்டுள்ளன.

இப்பகுதிகளில் கழக வேட்பாளர் அமிர்தராஜுவை ஆங்காங்கே, பெண்கள் ஆரத்திஎடுத்து வரவேற்று "எங்கள் ஓட்டு உங்களுக்கே" என உறுதி கூறினர்

குலசேகரன் பட்டினத்தில் குமரி மாவட்ட கழகச் செயலாளர் எப். எம். ராஜரத்தினம் தலைமையில் கழகத் தொண்டர்கள் தீவிர தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டுள்ளனர்.

## பெண்கள் ஆர்வம்

சாலைகளில் கழகக் கொடியுடன் கழகத்தவர் பிரச்சாரத்திற்கு செல்லும்போது. வயல்களில் வேலை செய்யும் பெண்கள், இரட்டைஇலைக்கே எங்கள் ஓட்டு எனத் தெரிவித்தனர்.

திருச்செந்தூர், குலசேகரன்பட்டினம், காயாமொழி, ஆறுமுகநேரி, ஆத்தூர் தேனிகுடியிருப்பு பரமன் குறிச்சி, முருகேசன்புரம், குருநாதபுரம் ஆகிய

## அமைச்சர் விஜயசாரதி தேர்தல் பிரச்சாரம்

திருச்செந்தூர், பிப். 19- ஆதி திராவிடர் நலத் துறை அமைச்சர் விஜயசாரதி திருச்செந்தூர் தொகுதியில் தீவிரமாகத் தேர்தல் பிரச்சாரம் செய்து வருகிறார். கிராமம் கிராமமாகச் சென்று கழக வேட்பாளர் அமிர்தராஜுக்கு அவர் ஆதரவு திரட்டி வருகிறார்.

## வானொலியில் லியாகத் அலிகான் பேசுகிறார்

சென்னை, பிப். 19— அக்ரோ இண்டஸ்ட்ரீஸ் கார்ப்பரேஷன் தலைவர் லியாகத் அலிகான் திருச்சி வானொலியில் பிப்ரவரி 23-ந் தேதி மாலை 7-25 மணிக்கு பேசுகிறார். விவசாயிகள் பற்றிய நிகழ்ச்சியில் சூரியகாந்தி சாகுபடி பற்றியும், சனோலா எண்ணையின் சிறப்புகள் பற்றியும் பேசுகிறார்.

### கழக வேட்பாளர் அமிர்தராஜை ஆதரித்து

## கிராமம் கிராமமாக அமைச்சர் அண்டே தீவிர பிரச்சாரம்

**திருச்செந்தூர், பிப், 19- திருச்செந்தூர் தொகுதியில் கழக வேட்பாளர் அமிர் தராஜை ஆதரித்து அமைச்சர் அண்டே கிராமம் கிராமமாக பிரச்சாரம் செய்தார்.**

திருச்செந்தூர் சட்டமன்ற தொகுதியில் போட்டியிடும் கழகவேட்பாளர் ஆர். அமிர்தராஜை ஆதரித்து அமைச்சர் அண்டே உடன்குடி ஒன்றியத்தில் நேற்று மெய்ஞானபுரம், சோலைகுடியிருப்பு கரிசன்விளைவீரப்பன்நாடார் குடியிருப்பு, சுந்தரவதனம், ஸ்ரீராமநல்லூர், ராம சுப்பிரமணியபுரம் ஆகிய கிராமங்களில் தீவிர பிரச்சாரம் செய்தார்.

பரமன்குறிச்சியில் நடைபெறும் கழகக் கூட்டத்தில் அமைச்சர் அண்டே பேசுகிறார்.

## உற்சாக வரவேற்பு

மேற்கண்ட கிராமங்களில் அமைச்சர் அண்டேயை கிராம மக்கள் உற்சாகமாக வரவேற்று, எங்கள் ஓட்டு குழந்தைகளுக்கு சத்துணவுத் தந்த புரட்சித் தலைவரின் கழகத்திற்கே, என உறுதியுடன் தெரிவித்தனர்.

அதன்பிறகு இரவு உடன்குடியில் நடந்த கழகப் பொதுக்கூட்டத்தில் அமைச்சர் அண்டே பேசினார்.

நாளை (20-ந் தேதி) ஆத்தூர் நகரில் பழைய ரதவீதி, கீழரதவீதி ஆகிய வீதிகளில் அமைச்சர் அண்டே பிரச்சாரம் செய்கிறார்.

இரவு திருச்செந்தூரில் நடக்க உள்ள கழக பொதுக்கூட்டத்தில் பங்கேற்றுப் பேசுகிறார்.

## காலை முதல் இரவு வரை

இன்று (19-ந் தேதி) காலை 9 மணி முதல் திருச்செந்தூர் நகரில் வீதிவீதியாக அமைச்சர் அண்டே கழக வேட்பாளரை ஆதரித்து பிரச்சாரம் செய்தார்.

திருச்செந்தூரில் உள்ள 15 வார்டுகளிலும காலை 9 மணிக்கு தொடங்கிய பிரச்சாரம் இரவு சுமார் 8 மணிவரை நீடிக்கிறது.

இன்று இரவு ஆழ்வார் திருநகரி ஒன்றியம்

## திருமணம்

கோவை கீதாலயா தியேட்டர் மற்றும் பொள்ளாச்சி சாந்தி தியேட்டர் உரிமையாளரும் பிரபல படவிநியோகஸ்தருமான கே. முருகேசனின் புதல்வன் ரதினவேல் சுப்பிரமணியனுக்கும், தாராபுரம் ஏ. டி. பழனிசாமி கவுண்டரின் புதல்வி அங்கயற்கண்ணிக்கும் இம்மாதம் 24-ந் தேதி கோவைஸ்ரீ ராமகிருஷ்ணா திருமண மண்டபத்தில் திருமணம் நடைபெறுகிறது. திருமணத்தை யொட்டி 24-ந் தேதி காலை 9 மணிக்கு குன்னக்குடி வைத்தியநாதனின் இசைக்கச்சேரியும் நடைபெறுகிறது.

## அசாம் கலவரம்: ஒரே நாளில் 60 பேர் சாவு

**ஷில்லாங். பிப். 19- அசாம் மாநிலத்தில் கலவரங்கள் நடந்து வரும் பகுதிகளில் நேற்று மீண்டும் வன்முறை சம்பவங்கள்தலைதூக்கின கிழக்கு பிரம்மபுத்ரா பள்ளத்தாக்கில் நடந்த கலவரத்தில் நேற்று ஒரே நாளில் 60 பேர் உயிரிழந்தனர்.**

அசாம் மாநிலத்தில் சட்டசபைக்கான பொதுத் தேர்தல்கள் நடந்துவருகின்றன. முதல் கட்ட தேர்தலும், 2-ம் கட்ட தேர்தலும் ஏற்கனவே நடந்து முடிந்துள்ளன. நாளை 20-ம் தேதி 3-ம் கட்ட தேர்தல்நடைபெறவுள்ளது.

தேர்தல் நடைபெறப் போவது பற்றி அறிக்கை வெளியிடப்பட்டதில் இருந்த அசாம் மாநிலத்தில் தேர்தலை எதிர்த்து வன்முறைச் சம்பவங்கள் நடக்க ஆரம்பித்துவிட்டன.

வீடுகள் மற்றும் வாகனங்களுக்கு தீவைப்பு, கல்வீச்சு, சம்பவங்கள் மாநிலம் முழுவதும் நடக்கத்துவங்கின. தீவைப்பு சம்பவங்களில் சுமார் 4 அல்லது 5 கிராமங்கள் அடியோடு அழிந்துவிட்டன என்றும் சொல்லப்படுகிறது. இதுவரை சுமார் 300 பேர் இந்த வன்முறை சம்பவங்களில் உயிரிழந்தனர் என்று தெரிகிறது.

நேற்றுமீண்டும்பிரம்மப் புத்ரா பள்ளத்தாக்குப் பகுதியில் கலவரம் நடந்தது.

### மக்கள் வெளியேற்றம்

நௌகாங் மாவட்டத்தில் உள்ள புராதன மலை ஜாதியினர் அந்தப் பகுதியில் உள்ள மற்ற இனத்தவர் மீது தாக்குதல் நடத்தினார்கள் இந்த கலவரம் ஜாகிசாலை பகுதிகளிலும் பரவியது. இந்தக் கலவரத்தில் நேற்று ஒரே நாளில் 60 பேர் உயிரிழந்தனர் என்று கூறப்படுகிறது.

கோஸ்வார் பகுதியில் பயங்கர மொழிக் கலவரமும் நேற்று ஏற்பட்டது தடை உததரவு அமலில் உள்ள ஓஜால், மங்கல்டோய் முதலிய பகுதிகளிலும் நேற்று இனக் கலவரங்கள் ஏற்பட்டன. கலவரப் பகுதிகளில் இருந்து ஏராளமான மக்கள் வெளியேறிக் கொண்டிருக்கிறார்கள் என்றும் கூறப்படுகிறது.

## மாநிலங்களவையில் இனி தமிழில் பேசலாம்

புதுடெல்லி, பிப். 19— மாநிலங்களவையில் உறுப்பினர்கள் இனி தமிழிலும் பேசலாம். அவையில்10 மொழிகளில் பேசுவதை உடனடியாக ஆங்கிலத்திலும் இந்தியிலும் மொழி பெயர்ப்பதற்கான வசதிகள் தற்போது உள்ளன.

தமிழ், அஸ்ஸாமிய மொழி, வங்க மொழி, குஜராத்தி, கன்னடம், மலையாளம், மராத்தி, ஒரியா, பஞ்சாபி தெலுங்கு ஆகிய மொழிகளில் உறுப்பினர்கள் பேசலாம்.

மேற்கூறிய 10 மொழிகளில் ஏதேனும ஒரு மொழியில் உறுப்பினர் பேச விரும்பினால் ஒரு மணி நேரம் முன்னதாக சம்பந்தப்பட்ட அதிகாரியிடம் தெரிவித்துவிட வேண்டும்என்றுமாநிலங்களவை செயலகப் பத்திரிகைக் குறிப்பு கூறுகிறது.

கேள்வி நேரத்தின் போது இந்தி, ஆங்கிலம் தவிர மற்ற மொழிகளில் கேள்வி கேட்க விரும்புபவர்கள் ஒருநாள் முன்னதாக நோட்டீஸ் தர வேண்டும்.

சபைநடவடிக்கை முழுவதையும் ஆங்கிலத்திலிருந்து இந்திக்கோ அல்லது இந்தியிலிருந்து ஆங்கிலத்திறகோ மொழி பெயர்க்கும் வசதி மாநிலங்களவையில் உள்ளது. உருதுவிலிருந்து ஆங்கிலத்திற்கு மொழிப் பெயர்ப்பதற்கான வசதியும் இருக்கிறது.

### குடியாத்தம் ஒன்றிய

## செயலர் பட்டு பார்த்தசாரதி காலமானார்

குடியாத்தம், பிப். 19- குடியாத்தம் ஒன்றியக் கழகச் செயலாளர் பட்டு பார்த்தசாரதி நேற்று அதிகாலை மாரடைப்பால் இயற்கை எய்தினார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

அவரது மறைவுச் செய்தி கேட்டு துயருற்ற கழகத்தோழர்கள அவரது இல்லத்திற்குச் சென்று இறுதி அஞ்சலி செலுத்தினர்.

## போர்ப்பரணிபாடி புறப்படுங்கள்!

**கண்ணின் மணியே! கழக மறவனே!**

**புரட்சித்தலைவரின் புலிநிகர் உடன்பிறப்பே!**

களம் அமைந்துவிட்டது திருச்செந்தூரில்.

கழகத்தின் வலிவைக் காட்ட மற்றுமொரு சந்தர்ப்பம் வந்திருக்கிறது

தேர்தல் என்றாலே தித்திப்புத்தான் நமக்கு!

இடையிலிருப்பது இன்னும் சில நாட்கள்

இதற்குள் நமக்கிருக்கும் பணிகளோ ஏராளம்! ஏராளம்!

மககள் சக்தியின் ஒட்டுமொத்த உருவம் புரட்சித்தலைவர் தான். ஏழை-எளிய பாட்டாளி மக்களின் இதயதெய்வம் புரட்சித்தலைவர் தான்!

அந்தப் பெருமக்களின் அமோக ஆதரவு புரட்சித் தலைவருக்குத்தான்!

இருந்தாலும்-

**இந்தத் தேர்தலில் எதிரிகள் அமைத்திருக்கும் வியூகம் சற்று வித்தியாசமானது.**

**இறந்து போன ஒருவரின் பிணத்தைஎடுத்து அரசியல் சந்தையில் அவர்கள் விலை பேசிக்கொண்டிருக்கிறார்கள்.**

ஆட்சியிலிருந்த காலத்தில் அடித்த கொள்ளைப் பணத்தைக் கொட்ட தி. மு. க. திட்டமிட்டிருக்கிறது.

நம் நிலை அப்படியல்ல!

**ஓட்டுக் கேட்கும் மக்களிடமே தேர்தல் நிதியும் கேட்கிறோம்.**

**அவர்கள் நிதியும் தருகிறார்கள். நமக்கு ஆதரவும் தருகிறார்கள்.**

இதுவரை நாம் சந்தித்த தேர்தல்கள் இப்படித்தான் - எனவே இந்தத் தேர்தலும் அப்படித்தான்.

கழகத்தை வீழ்த்தும் சக்தி நம்மை எதிர்க்கும் எந்தக்கட்சிக்கும் இல்லையென்றாலும்—

**நம்மிடம் மெத்தனம் கூடாது.**

**தூங்கிய முயலாக நாம் ஆகிவிடக் கூடாது.**

**ஓட்டுக்களைச் சரிபார்க்கும் வேலையை இன்றே நாம் தொடங்கியாக வேண்டும்.**

**நம்மை எதிர்த்துப் போட்டியிடும் பிரதான கட்சி; கள்ள ஓட்டுப் போடுவதில் கைதேர்ந்தவர்களைக் கொண்ட கட்சி!**

கண்ணும் கருத்துமாக கவனித்து காரியமாற்றினாலேயொழிய கள்ளத்தனத்தைத் தடுத்திட முடியாது.

எனவே - கண்காணிப்பு அதிகம் தேவை.

வீடு வீடாகச் சென்று ஓட்டுக் கேட்பதைவிட இந்தப்பணி முக்கியம்.

திருச்செந்தூரும் பெரியகுளம் தான் என்று பிரகடனப்படுத்தியாக வேண்டியது காலத்தின் கட்டாயமாகி விட்டது.

**அண்ணாவின் இதயக்கனியாம் புரட்சித் தலைவருக்குத் திருச்செந்தூர் வெற்றிக்கனியை நாம் தந்தாக வேண்டும்.**

**அந்தக் கடமையை ஆற்றிட- அடலேறுகளே! ஆற்றல் மறவர்களே!**

**ஆர்த்தெழுங்கள்!**

**போர்ப்பரணி பாடிப் புறப்படுங்கள் தேர்தல் களத்துக்கு!**

## திருச் செந்தூரும் பெரியகுளம்தான் - எனும் தேர்தல் முடிவுக்கு உழைத்திட புறப்படு!

# கோரக் கொலைகள் தொடர்வதைத் தடுக்க...

★ கொமாரபாளையம் ஜமீலாபீபி கோரக் கொலை!
★ வத்தலக்குண்டு ஆறுமுகம் வெட்டிக் கொலை!
★ பூலாவரி சுகுமாரன்-பழனியப்பன் சுட்டுக் கொலை!
★ வீரபாண்டிகிருஷ்ணன் படுகொலை!
★ விருதுநகர் துரை வெட்டிக் கொலை!
★ தூத்துக்குடி சிகாமணி கோரக் கொலை!
★ பரமகுடி தீனதயாளன் படுகொலை!
★ மதுராந்தகம் ராஜாபாதர் கொலை!
★ மதுராந்தகம் அகமதுபாட்சா கொளுத்திக் கொலை!
★ மாதவரம் டார்வின் படுகொலை!
★ திருவொற்றியூர் தியாகராசன் படுகொலை!
★ திருப்பத்தூர் ராஜு கோரக் கொலை!
★ அண்ணாமலை நகர் பாலசுந்தரம் அடித்துக் கொலை!
★ சிறுமதுரை மோகன் படுகொலை!
★ சங்ககிரி செல்லதாஸ் கொலை!
★ ஆடிவள்ளி காளிமுத்து கோரக் கொலை.
★ ஈரோடு சுப்பிரமணி படுகொலை!
★ திருச்சி பரமசிவம் கொலை!
★ கல்லுக்குழி சுந்தன் கோரக் கொலை!
★ குளிக்கரை ஜெயராமன் குத்திக் கொலை!
★ குடவாசல் ராமு படுகொலை!
★ விருத்தாசலம் துரைக்கண்ணு கோரக் கொலை!
★ கோவை சுரேஷ்குமார் படுகொலை!
★ கோவை ராதாகிருஷ்ணன் கொலை!
★ கோவை விஜயகுமார் கோரக் கொலை!
★ திருப்பூர் நாகராசன் கொலை!
★ கோவை பொன்னுசாமி படுகொலை!
★ உடுமலை இஸ்மாயில் படுகொலை!
★ கோடம்பாக்கம் கோபால் கோரக் கொலை!
★ புரசவாக்கம் பூபதி படுகொலை!
★ ராயபுரம் தமிழ்வாணன் குத்திக் கொலை!
★ பூங்காநகர் விஜயகுமார் அடித்துக்கொலை!
★ எம். ஜி. ஆர் நகர் குப்பன் கொலை!
★ கோட்டூர்புரம் லூர்துசாமி கோரக் கொலை!
★ ஆவடி மணி படுகொலை!

இந்தப் படுகொலைகளைச் செய்த படுபாவிகள் யார்?
கருணாநிதி கட்சியின் கைக்கூலிகளும், எடுபிடிகளும் அல்லவா?
கொலை செய்யப்பட்டோர் அனைவரும் புரட்சித்தலைவரின் கொள்கைத் தங்கங்கள் அல்லவா?
இந்தக் கோரக் கொலைகள் தொடர்வதைத் தடுத்திட வேண்டாமா?
திருச்செந்தூர் தொகுதி வாக்காளப் பெருமக்களே சிந்திப்பீர்!

கொலைகாரக் கட்சிக்குப் பாடம் புகட்டிட-

## ஆதரிப்பீர் இரட்டை இலை!

82-வது வட்டத்தில்

## கழகப் பொதுக் கூட்டம்

சென்னை, பிப். 19— சென்னை 82—வட்டம் சார்பாக கழகப்பொதுக் கூட்டம் வைத்தியநாத முதலி தெருவில் 21—ந் தேதி மாலை 7 மணி அளவில் ஆர், நாராயணன் தலைமையில் முருகேசன் வாசு ஆகியோர் முன்னிலையில் நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில் புலவர் அறிவுடைநம்பி, சி. வி. ஆடலழகன், வண்ணை கோவிந்தன், வ. கோதண்டராமன், ஆர். கோதண்டன், எம். சுப்பராயன், நாராயணசாமி, ஜெயச்சந்திரன், துவாரகநாதன், செல்வராஜி, பாலு, குமாரகுருப, செஞ்சி அண்ணாமலை, வாசுதேவன், ஏழுமலை, மூர்த்தி, முருகன், சேகர் ராகவன், தேவன்மற்றும் பலர் கலந்து கொண்டு பேசுகின்றனர்.

**அண்ணாவில் விளம்பரம் செய்து பயன் பெறுங்கள்**

# ரூ. 213 கோடி வசூல்: சிறுசேமிப்பில் தமிழகம் சாதனை

**சென்னை, பிப். 19- சிறுசேமிப்பு திட்டத்தின் கீழ் ரூ 213 கோடி வசூலித்து தமிழக அரசு சாதனை புரிந்துள்ளது.**

இதுகுறித்து அரசு வெளியிட்டுள்ள பத்திரிகைக் குறிப்பு வருமாறு!—

1981-82-ஆம் ஆண்டில் தமிழ்நாடு சிறுசேமிப்புத் திட்டத்தின் கீழ் ரூ. 213.52 கோடி வசூல் செய்து, இதுவரை இவ்வளவு அதிக தொகை வசூல் செய்தது கிடையாது என்ற ஒரு சாதனையை அடைந்துள்ளது. 1980—81ஆம் ஆண்டில் ரூ. 188.89 கோடி தான் வசூல் செய்யப்பட்டது. 1981-82-ம் ஆண்டில்வசூல்1970-71ம் ஆண்டில் வசூலித்த ரூ. 42.29 கோடியைவிட ஐந்து மடங்குக்கு மேல் அதிகமாகும். அனைத்து திட்டங்களிலும் 1981-82-ஆம் ஆண்டில் கணிசமான முன்னேற்றம் காணப்பட்டுள்ளது.

சேமிப்பு வங்கி வசூல் 6.12 சதவிகிதம் உயர்ந்துள்ளது. சி.டி.டி. 9.69 சதவிகிதம ஆர். டி. 17.13 சதவிகிதம் டி. டி. 3.8 சதவிகிதமும் பத்திரங்கள் மற்றும் பிற ஆவணங்கள் 106.24 சதவிகிதமும், உயர்ந்துள்ளது. 1981-82ஆம் ஆண்டில் மொத்த வசூலில் 13.04 சதவிகிதமும் நிகர வசூலில் 2.22 சதவிகிதமும் உயர்ந்துள்ளது.

### தீவிர நடவடிக்கை

இந்த அளவு அதிக வசூலுக்கு முக்கியக் காரணம் வீட்டுக்கு ஒன்று அல்லது அதிககணக்குகள் துவக்க நடவடிக்கை மேற்கொண்டதுதான். இத்திட்டத்தை அடித்தளத்திலிருந்து செயல்படுத்த வேண்டும் என்ற அடிப்படையில் ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியன், நகர பஞ்சாயத்து, மாநகராட்சி வரம்பிற்குள் உள்ள ஒவ்வொரு வீட்டிற்கும் ஒரு சிறு சேமிப்பு கணக்கு என்ற விகிதத்தில் குறைந்தது 5000 கணக்குகள் துவக்க வேண்டும் என்று அரசு ஆணையிட்டது.

அந்த ஆணையை கருத்தில் கொண்டு அரசு, மற்றும் சிறு சேமிப்புத் துறை, மாவட்ட ஆட்சியர்களின் உதவியோடு தீவிரமாக செயல்படுத்தியது. இதன் மூலம் அஞ்சலக சேமிப்பின் அவசியத்தை தமிழக மக்கள் ஏற்றுக் கொண்டார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. காரணம் அஞ்சலகச் சேமிப்பில் தான் அதிக வட்டி, பாதுகாப்பு மற்றும் அனைவருக்கும் ஏற்ற பல்வேறு திட்டங்கள் உள்ளன என்பதை அவர்கள் புரிந்து கொண்டனர். 1981-82-ஆம் ஆண்டில் ரூ. 52.30 கோடி என இலக்கு நிர்ணயிக்கப்பட்டது. ஆனால் இலக்குக்கு மேல் ரூ. 5.84 கோடி வசூலித்து நிகர வசூல் ரூ. 58.14 கோடியை எட்டியது.

தமிழக மக்களின் இந்த முழு ஒத்துழைப்புக்கு தமிழக அரசு சிறுசேமிப்புத்துறை நன்றி தெரிவித்துக் கொள்கிறது. இதேபோன்று முழு ஒத்துழைப்பை வருங்காலங்களிலும் வழங்குமாறு கேட்டுக் கொள்கிறது.

இவ்வாறு அந்தசெய்திக் குறிப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆந்திர முதல்வர்

## ராமாராவ் தேர்தலை எதிர்த்து வழக்கு

ஐதராபாத், பிப். 19— ஆந்திர மாநிலத்தில் நடைபெற்ற சட்டசபைக்கான பொதுத் தேர்தலில் என். டி. ராமாராவ் குடிவாடா தொகுதியில் போட்டியிட்டு அமோகமாக வெற்றிபெற்றார் என்பது தெரிந்ததே. ஆந்திராவின் முதலமைச்சராகவும் அவர் பதவி ஏற்றுள்ளார்.

குடிவாடாதொகுதியில் அவர் வெற்றி பெற்றதை செல்லாது என்று தீர்ப்பளிக்க வேண்டும் என்று கோரி எல். பன்னாராவ் என்பவர் ஆந்திர மாநில ஐகோர்ட்டில் வழக்குத் தொடர்ந்துள்ளார். தேர்தலில் முறைகேடுகளும், லஞ்ச ஊழல்களும் உள்ளன. ஆகவே அவரது வெற்றியை செல்லாது என்று தீர்ப்பளிக்கவேண்டும் என்றும் பன்னாராவ் தனது மனுவில் குறிப்பிட்டுள்ளார்.

ரூ. 25 லட்சம் ஒதுக்கீடு:

## சென்னை நகரில் கொசுவை ஒழிக்க மாநகராட்சி தீவிரம்

**சென்னை, பிப். 19- சென்னை நகரில் கொசு தொல்லையை ஒழிக்க மாநகராட்சி தீவிர நடவடிக்கை எடுத்து வருகிறது என்று மாநகராட்சி தனி அதிகாரி சுந்தர்ராஜ தெரிவித்தார்.**

சென்னை நகரில் சைதாப்பேட்டை, மேற்கு மாம்பலம், அயனாவரம் ஆகியபகுதிகளில் கொசுத் தொல்லை அதிகமாக உள்ளது. கொசுத் தொல்லையை ஒழிக்க மாநகராட்சி அதிகாரிகள் தீவிர நடவடிக்கை எடுத்து வருகின்றனர்.

இதுபற்றி மாநகராட்சி தனி அதிகாரி நிருபர்களிடம் கூறியதாவது!-

கொசுக்களினால் ஏற்படும் மலேரியாவை ஒழிப்பதற்காக கடந்த ஆண்டு மாநகராட்சிரூ. 25லட்சம் ஒதுக்கி செலவிட்டது. கொசுக்களை ஒழிப்பதற்கான மருந்துகள்தெளிக்கப்படுகின்றன ஆனால் இப்போது கொசுக்களை குஞ்சு பருவத்திலேயே ஒழிக்க நடவடிக்கை எடுத்து வருகிறோம்.

குளம், குட்டைகளில் உள்ள நீர் குவளை செடிகளில்தான் கொசுக்கள் உற்பத்தியாகின்றன. ஆகவே அவைகளை அகற்ற திட்டமிட்டு செயல்பட்டு வருகிறோம்.

சென்னையில் பக்கிங்காம் கால்வாய் மற்றும் நீர் குட்டைகளில் உள்ள நீர்க்குவளை செடிகளை அகற்ற நாளொன்றுக்கு 200 பேர் வீதம் 3 மாதத்திற்கு வேலை செய்தால் தான் முடியும்.

இவ்வாறு மாநகராட்சி தனி அதிகாரி சுந்தர்ராஜ் நிருபர்களிடம் தெரிவித்தார்.

## தங்கக்கடத்தல்: ராஜஸ்தான் ஆசாமி கைது

சென்னை, பிப். 19— மத்திய சுங்க வரித்துறை டைரக்டர் பி. ஆர். ரெட்டி உத்தரவின்பேரில் சுங்க வரித் துறையினர் சோதனை நடத்தினர்.

இதில் ஆந்திராவில் இருந்து பஸ்சில் வந்த ராஜஸ்தானைச் சேர்ந்த கோவிந்த பிரசாத்வர்மா என்ற ஆசாமி தன் கால் பாதத்தின் அளவில் செருப்புக்குள் 2.46 கிலோ தங்கத்தைவைத்து எடுத்து வந்தாராம்.

இந்த ஆசாமி கைது செய்யப்பட்டார். இந்த தங்கத்தின் மதிப்பு 4.6 லட்சம் ரூபாய் ஆகும்.

இதே போல் பல்வேறு பொருட்களைக் கடத்தியதாக, நீலாங்கரை குப்பத்தில் அருண் உட்பட 5 பேர் கைது செய்யப்பட்டு 5.54 லட்ச ரூபாய் மதிப்புள்ள பொருட்கள் பறிமுதல் செய்யப்பட்டன.

## மண் பாண்டங்கள் பொருட்காட்சி

சென்னை, பிப். 19— அகில இந்திய மண்பாண்டங்கள் உற்பத்தியாளர் கழகத்தின் 47 வது ஆண்டுக் கூட்டம் நேற்று (18 ந் தேதி, தொடங்கியது. இக்கூட்டம் 21-ந் தேதி வரை நடைபெறுகிறது.

இது தொடர்பாக நடந்த பத்திரிகையாளர்கள் கூட்டத்தில் இக் கழகத்தலைவர் வர்ஷானி மற்றும் மூசாசுலைமான், ஏ. ஆர். குல்லா ஆகியோர் இத்தொழில்ன் சிறப்புகள் பற்றியும், இத்தொழில் எதிர்நோக்கியுள்ள பிரச்னைகள் பற்றியும் நிருபர்களிடம் கூறினர்.

மண்பாண்ட பொருட்கள் காட்சி இன்று முதல் 2 நாட்களுக்கு நடைபெறுகிறது. திருமதி. கரியாலி, இ.ஆ.ப. இன்று பொருட் காட்சியைத் தொடங்கி வைக்கிறார். விழாவினையொட்டி கலை நிகழ்ச்சிகளும்நடைபெறுகின்றன.

மூடப்பட்டிருந்த

## சிம்கோ ஆலை 24-ந் தேதி திறப்பு

திருச்சி, பிப். 19— கடந்த 9 மாதங்களாக மூடப்பட்டிருந்த சிம்கோ மீட்டர் தொழிற்சாலை வரும் 24ம் தேதி முதல் திறக்கப்படவிருக்கிறது.

தொழிலாளர் நல துணைக்கமிஷனர் தொழிற்சங்கத்தலைவர்கள் ஆகியோருக்கிடையே ஏற்பட்ட உடன்பாட்டை தொடர்ந்து இம்மாதம் 24ம் தேதி முதல் தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்புகிறார்கள்.

திருச்செந்தூர் தொகுதி

## மார்ச் 1-ந்தேதி தொழிலாளருக்கு விடுமுறை தர அரசு யோசனை

சென்னை, பிப். 19— திருச்செந்தூர் தொகுதி இடைத்தேர்தல் நடைபெற இருக்கும் மார்ச் 1-ந்தேதியை அத்தொகுதியில் உள்ள பகுதிகளுக்கு பொது விடுமுறையாக ஏற்கனவே அரசு அறிவித்துள்ளது.

அப்பகுதியில் உள்ள தொழிற்சாலைகளில் பணிபுரியும் தொழிலாளர்கள் ஓட்டுப் போடுவதற்காக அவர்களுக்கு அன்றைய தினம் சம்பளத்துடன் விடுமுறை வழங்கும்படி தொழில் அதிபர்களை அரசு கேட்டுக்கொண்டுள்ளது.

## எம். ஜி. ஆர். மன்ற செயற்குழு கூட்டம்

அனைத்துலக எம். ஜி. ஆர். மன்ற செயற்குழு கூட்டம் வருகிற 21—2—83 திங்கட்கிழமை மாலை 6.00 மணிக்கு திருநெல்வேலி டவுன், பாப்பம்மாள் திருமண மண்டபத்தில் கூடுகிறது. மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற நிர்வாகிகள் தவறாது கலந்துகொள்ள வேண்டுகிறேன்.

செயற்குழுவிற்கு வருகின்ற தோழர்கள், திருச்செந்தூர் தேர்தல் பணிக்காக வாகன வசதி, மற்ற ஏற்பாடுகளையும் தங்கள் சொந்த பொறுப்பில் செய்துகொண்டு வரவேண்டுகிறோம்.

இங்ஙனம்

| | |
|---|---|
| பி. முசிறிப்புத்தன் | ஆர். சௌந்திரராசன் |
| தலைவர் | பொதுச்செயலாளர் |
| அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றம் | அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றம் |





Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34. Nelson Manickam Road Madras-600 029.
Editor: E. PARASURAMAN

# களம் அமைந்து விட்டது திருச்செந்தூரில் கழகக் காளையே இன்னுமா தாமதம்?